Regd. No TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு



**உண்மை**

நீதியை நிலைநாட்ட, ஊர் நன்மை பெற, உயிர் வாழ, உரிமை காக்க இவற்றுக்காகப் பணியாற்றும் போது உயிருக்கு ஆபத்து என்றாலும் கலங்காது உண்மை பேசுக.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**தெளிவு**

நல்லெண்ணம் மட்டும் ஒரு பிரச்சினையின் சிக்கலைப் போக்கிடப் போதுமானதல்ல. பிரச்சினையைத் தெளிவாக்கிக் கொள்ள வேண்டியது மிகமிகத் தேவை.

-தந்தை பெரியார்



மலர்: 7 சென்னை 8 - 12 - 82 புதன் வெளியூர் 9 - 12 - 82 வியாழன் இதழ்: 52

# இந்திராவை கொலை செய்யத் திட்டமிட்டு கலவரம் நடத்திய தி.மு.க.வினர்

## இ. காங்கிரஸ் பிரமுகர் சாட்சியம்

**சென்னை, டிச 8- இந்திராவைக் கொலை செய்ய தி.மு.க. வினர் திட்டமிட்டிருந்தனர். இந்திரா வந்தபோது அவர் செல்லும் வழி எங்கும் தி.மு.க. வினர் வன்முறை வெறியாட்டம் நடத்தினர் என்று நீதிமன்றத்தில் இ. காங்கிரஸ் பிரமுகர் சாட்சியம் அளித்தார்.**

இந்திராகாந்தி 1977ல் தமிழகம் வந்தபோது அவரை தி. மு. க. வினர் கொலை செய்ய முற்பட்டனர் அல்லவா?

இது சம்பந்தமாக கருணாநிதி உட்பட தி.மு.க.வினர் மீது வழக்கு தொடரப்பட்டுள்ளது. இந்த வழக்கு விசாரணை சென்னை 5வது அடிஷனல் செசன்சு கோர்ட்டில் நடக்கிறது. இதில் காஞ்சிபுரத்தைச் சேர்ந்த இ. காங்கிரஸ் பிரமுகர் கருணாகரன் சாட்சியம் அளித்தார்.

அவர் கூறியதாவது:—

இந்திராகாந்தி வர இருந்த நாளன்று நானும் காஞ்சிபுரம் நகர இ. காங்கிரஸ் தலைவர் ரங்கநாதனும், ஜெயராமனும், சந்தியப்பனும் பொன்னேரிக்குச் சென்றோம். வழிநெடுக திமுகவினர் கூடியிருந்து அமளி செய்து கொண்டிருந்தனர். இடையிலே ஓரிடத்தில் எங்கள் கார் மெதுவாகச் சென்றது.

அங்கு பெருமாள், பழனிவேலு, சக்கரபாணி, கன்னிபிள்ளை, திருவேங்கடம், சண்முகம் ஆகிய தி. மு. க. வினர் எங்கள் காரை சவுக்கு கட்டை கொண்டு தாக்கினர்.

திருவேங்கடம் நீண்ட கத்தியைக் கொண்டு எங்களைத் தாக்க முற்பட்டார். அவருடைய கத்திக்குத்து எங்கள் காரின் மீது விழுந்தது. சண்முகம் எங்கள் கார் மீது பெரிய கல்லைத் தூக்கிப் போட்டார்.

இவ்வளவையும் தாங்கிக் கொண்டு இரட்டை மண்டபத்தை நாங்கள் அடைந்தோம். மேற்கொண்டு தொடர்ந்து செல்லமுடியவில்லை.

வழியில் 16வது

(2-ம் பக்கம் பார்க்க)

## கேள்வி - பதில்

**கேள்வி:** கர்நாடக மாநிலத்தில் மொழிப் போராட்டத்தின் போது துப்பாக்கிச் சூட்டில் இறந்தவர்கள் குடும்பங்களுக்கு எம். ஜி. ஆர். உதவி நிதி வழங்கவில்லையே ஏன்?

**பதில்:** 19-ந் தேதி வாருங்கள். கர்நாடக மாநிலத்தில் நடந்த மொழி போராட்டத்தில் குண்டடிபட்டு இறந்தவர்களின் குடும்பங்களுக்கும் அன்று உதவி நிதி வழங்கப்படுவதைக் காண்பீர்கள்.

**கேள்வி:** ராஜராஜசோழன் காலத்திலேயே மதிய உணவுத் திட்டம் கொண்டு வரப்பட்டதாக திண்டிவனம் ராமமூர்த்தி கூறியிருக்கிறாரே?

**பதில்:** காமராஜர்தான் மதிய உணவுத் திட்டம் கொண்டுவந்தவர். என்று கூறி வந்தார். மாற்றிக் கொண்டதற்கு நன்றி!



'நியூஸ்டுடே' ஆங்கில பத்திரிகையை முதல்வர் புரட்சித்தலைவர் வெளியிட்டார், முதல் பிரதியை பத்திரிகையாளர் சலபதிராவ் பெற்றுக் கொண்டார்.

★ கட்சியை குடும்பக் கம்பெனியாக்கும் கருணாநிதிக்கு இடிமேல் இடி

★ தி.மு.க.வில்தொண்டர்கள் குமுறல்வெடிக்கிறது

### அமைச்சர் காளிமுத்து முன்னிலையில்

# வேடசந்தூர் பகுதியில் 35 தி.மு.க. கிளைகள் கூண்டோடு கலைப்பு

### 2 ஆயிரம் பேர் கழகத்தில் இணைந்தனர்

**மதுரை, டிச. 8- தி. மு. க. தலைவர் கருணாநிதியின் போக்கினைக் கண்டித்து வேடசந்தூர் பகுதியில் 35 தி.மு.க. கிளைகள் கூண்டோடு கலைக்கப்பட்டன. 2 ஆயிரம் தி. மு. க. வினர் கழகத்தில் இணைந்தனர்.**

அமைச்சர் காளிமுத்து தலைமையில் இவர்கள் அனைவரும் கழகத்தில் இணைந்தனர்.

தி மு கழகத்தை தன் சுயநலத்திற்காக குடும்ப கம்பெனியாக மாற்ற கருணாநிதி முயற்சித்து வருவது தெரிந்தே.

கருணாநிதியின் இந்த திட்டத்தின்கீழ் மாவட்ட செயலாளர்கள் தேர்தல் நடை பெற்று வருகிறது.

சென்னை மாவட்ட திமுக செயலாளர் தேர்தல்-மதுரைமாவட்ட திமுக செயலாளர் தேர்தல் எல்லாவற்றிலும் கருணாநிதியின் மகன்கள் தலையிட்டு அப்பா சொல்படி செயல்பட்டு வருகின்றனர்.

கட்சி செல்லும் இந்த திசையைப் பார்த்து திமுகவில் இருக்கும் தொண்டர்கள் மனம் குமுறிக் கொண்டிருக்கிறார்கள்.

### தி.மு.க. கூடாரம் சரிகிறது

அண்ணா கண்ட கழகம் இப்படி அவல நிலைக்கு ஆளாவதா என்று மனம் வெதும்பி நிற்கின்றனர்.

தி.மு.க வினரின் இந்த குமுறல் சில இடங்களில் வெடிக்கத் தொடங்கி இருக்கிறது.

மதுரை மாவட்டம் வேடசந்தூரில் ஒருபெரும் வெடிப்பு எழுந்துள்ளது.

வேடசந்தூர் நகர திமுக உட்பட அப்பகுதியில் இருந்த 35 திமுக கிளைகள் கூண்டோடு கலைக்கப்பட்டன.

அதில் இருந்த சுமார் 2 ஆயிரம் திமுகவினர் அமைச்சர் காளிமுத்து முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

வேடசந்தூரில் கழகப் பொதுக்கூட்டம் நகர கழகச் செயலாளர் யூசுப் தலைமையில் நடந்தது.

அமைச்சர் காளிமுத்து இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டு பேசினார்.

வேடசந்தூர் நகர தி. மு. க. செயலாளர் எஸ். வி. ஆறுமுகம் தலைமையில் நகர தி.மு.க.வும் அதைச் சுற்றியுள்ள 35 திமுக கிளைகளும் கலைக்கப்பட்டு அதில் இருந்து 2 ஆயிரம் திமுகவினர் கழகத்தில் இணைந்தனர்.

ஜனதாக் கட்சியில் இருந்தும் இந்திரா காங்கிரசில் இருந்தும் மற்றும் பலர் கழகத்தில் இணைந்தனர்.

கழகத்தில் இணைந்த அனைவருக்கும் கழக உறுப்பினர் பாரங்கள் வழங்கப்பட்டு பூர்த்தி செய்தனர்.

அதிகார பூர்வமாக கழகத்தில் இவர்கள் அனைவரும் இணைந்தனர்.

கழகத்தில் இணைந்த அனைவரையும் அமைச்சர் காளிமுத்து வரவேற்றார்.

நாம் ஓரணியாக பேரணியாக புரட்சித் தலைவர் பக்கம் நிற்க வேண்டும் என்று அப்போது அமைச்சர் காளிமுத்து கேட்டுக் கொண்டார்.

### கர்நாடகாவில் தேர்தல்: வேட்புமனு தாக்கல்

பெங்களூர், டிச. 8— அடுத்த மாதம் (ஜனவரி) 5ம் தேதி கர்நாடக மாநிலத்தில் சட்டசபைக்கான பொதுத்தேர்தல் நடைபெறவிருக்கிறது.

இந்தத் தேர்தலுக்காக சுமார் 250க்கும் மேற்பட்டவர்கள் தங்களது வேட்பு மனுக்களை இதுவரை தாக்கல் செய்துள்ளனர்.

இந்திரா காங்கிரஸ் சார்பில் போட்டியிடும் வேட்பாளர்களின் பட்டியல் நேற்று வரை வெளியிடப்படவில்லை. ஆயினும் இந்திரா காங்கிரசைச் சேர்ந்தவர்கள் சிலர் தங்களது வேட்பு மனுக்களை தாக்கல் செய்து விட்டனர்.

### சாக்கு மூட்டையில் சாமி சிலைகள்

2-ம் பக்கம்

'கொடி நாள்' நன்கொடையாக முதல்வர் புரட்சித்தலைவர் தனது ஒரு மாத சம்பளத்தை வழங்கினார்



### எவருடைய தூண்டுதலாலும் போராடி

# வேலையை இழக்காதீர்

### கிளர்ச்சி நடத்தும் ஆசிரியர்கட்கு புரட்சித்தலைவர் எச்சரிக்கை

**சென்னை, டிச. 8- யாருடைய தூண்டுதலாலும் கிளர்ச்சி செய்து வேலையை இழக்கும் நிலைக்கு ஆளாகாதீர்கள் என்று, போராட்டம் நடத்தும் ஆசிரியர்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் எச்சரிக்கை விடுத்தார்.**

'நியூஸ்டுடே' பத்திரிகை வெளியீட்டு விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் பேசுகையில் கூறியதாவது:—

இன்றைய தினம் சத்துணவு திட்டத்திற்கு ஆசிரியர்கள் ஒத்துழைக்க மாட்டோம் என்கிறார்கள். சரி வேண்டாம்.

சத்துணவு வேலையை கவனித்தால் எங்களால் பாடம் நடத்த முடியாது என்கிறார்கள். வாதத்திற்கு ஒத்துக் கொள்வோம்.

ஒரு மாதம் அவகாசம் தரக் கூடாதா? 33 ஆயிரத்து 500 பேருக்கு புதிதாக வேலை தரப் போகிறோம். அதிலும் விதவை தாய்மார்களுக்கு எஸ்.எஸ்.எல்.சி. வரை படித்தவர்களுக்கு முன்னுரிமை, அநாதையாக உள்ள தாய்மார்களுக்கு முன்னுரிமை, இதை விட ஒரு குடும்பத்தில் வேலையில்லாமலிருக்கும் ஒருவருக்கு வேலையளிப்பதில் முன்னுரிமை. 33500 பேருக்கு வேலையளிக்க முயற்சிக்கிறோம்.

### உணவு அளிப்பதாக வேலை நிறுத்தமா?

ஆசிரியர்கள் வேலை நிறுத்தம் என்கிறார்கள். எதில் வேலை நிறுத்தம்? குழந்தைகளுக்கு ஒரு நேரம் உணவு அளிப்பதற்கு வேலை நிறுத்தம்.

நீங்கள் நீண்ட காலத்திற்கு இந்த வேலையைச் செய்ய வேண்டாம். நாங்கள் வேறு ஆளை நியமிக்கிறோம் என்றால் முடியாது என்கிறார்கள்.

தற்காலிகமாக நாங்கள் ஆட்களை நியமித்துக் கொண்டு பிறகு மனுக்களைப் பெற்று ஆட்களை நியமித்துக் கொள்கிறோம் என்றால் முடியாது, நாங்கள் ஊர்வலமாக வந்து மறியல் செய்வோம் என்கிறார்கள்.

இரண்டு நாட்களாக கைது செய்யப் பட்டிருக்கிறார்கள். நேற்று 600 பேர், இன்று 700 பேர். காலையில் கைது செய்து மாலையில் விட்டுவிடுகிறோம். யாரோ தூண்டி விடுகிறார்கள். நீங்கள் மாட்டிக் கொள்ளாதீர்கள் என்று.

### போராட்ட பின்னணி

இரண்டு நாட்கள் வேலைசெய்யவில்லையே குழந்தைகளுக்கு யார் பாடம் சொல்லித் தருவது?

சத்துணவை பார்க்க மாட்டோம் என்கிறீர்கள். சரி, பள்ளிக்கூடத்திற்கு போய் பாடம் சொல்லித் தரவேண்டியது தானே? எதற்கு மறியல்? எதற்கு போராட்டம்? இதற்கு நோக்கம் என்ன?

குழந்தைகளுக்கு பாடம் சொல்லிக் கொடுக்க முடியவில்லை சாப்பாடு போடுவதால் என்கிறீர்கள். வேறு ஆளை வைத்துக் கொள்கிறோம் என்றால் பிறகு மறியல் நடத்தினால் எப்படி? அந்த 2 நாள் படிப்பு போய் விட்டதே. உங்களுக்கு பதில் வேறு ஆளை வைத்து விட்டால் உங்கள் கதி என்ன?

நான் என்ன கருணாநிதி ஆட்சியா நடத்திக் கொண்டிருக்கிறேன் மன்னிப்புகடிதம் வாங்கிக் கொள்ள?

நான் ஒரே வார்த்தை தான் சொல்லுவேன். வேலை இல்லையென்றால் இல்லைதான். பிறகு என்னைக் குறை சொல்லக்கூடாது.

ஆசிரியர்களே சொல்லி விட்டார்கள் குழந்தைகளின் படிப்பு வீணாகக் கூடாதுஎன்று. நாளைக்கு மறியல் நடத்தினால்

(2-ம் பக்கம் பார்க்க)

## பொதுமக்களின் பொறுமையை சோதிக்க வேண்டாம்:

# கிளர்ச்சி தொடர்ந்தால் விளைவுகளுக்கு ஆசிரியர்களே பொறுப்பு

### முதல்வர் புரட்சித்தலைவர் அறிக்கை

**சென்னை, டிச. 8- அரசின் நல்லெண்ணத்தையும், பொது மக்களின் பொறுமையையும் சோதிக்கும் வகையில் ஆசிரியர்களின் தேவையற்ற கிளர்ச்சி தொடர்ந்தால் அதன் விளைவுகளுக்கு ஆசிரியர்களே பொறுப்பு என்று முதல்வர் புரட்சித் தலைவர் எச்சரித்திருக்கிறார்.**

(8 ம் பத்தி தொடர்ச்சி)

தீரவேண்டும் என்பது நாட்டிற்கு நன்மையும் ஒருமைப்பாட்டையும் உருவாக்குகிற வேலையா இதற்கு என்ன செய்யப் போகிறோம்?

தாங்களே ஏற்றுச் செய்யாதவர்களுக்கு சட்டத்தைக் கொண்டு தடை செய்வதைத் தவிர வேறு என்ன நிலைமை? அதை சொல்லுங்கள் சிந்திப்போம்.

தலைமைச் செயலாளரைப்பற்றி எழுதுகிறார்கள். அவர் நீதிமன்றத்திற்குப் போனால் உரிமையாளர் கைது செய்யப்பட வேண்டும். இருக்கிற சட்டப்படி ஜாமீன் மறுக்கப்படும்.

### இது ஒரு வேலையா?

ஒரு வழக்கில் ஜாமீனில் வெளியே வந்தால் மறுபடி எழுதுகிறார்கள் "என்னை எத்தனை முறை கைது செய் பார்ப்போம்' என்று. இது என்ன நாட்டின் பெரிய கொள்கைக்காக போராடுகிற வேலையா? இந்த நாட்டுக்கு உடனடியாக காவிரி தண்ணீர் பெறவேண்டும், நான் எத்தனை முறை வேண்டுமானாலும் கைதாவேன் என்று சொன்னால் நாட்டுக்கு நன்மை செய்கிறார் என மாலை போட்டு வழியனுப்பி வைப்போம்.

தலைமைச் செயலரைப் பற்றி அவமானப்படுத்தியதற்காக அத்தனை செயலர்களும் சேர்ந்து அந்தப் பத்திரிகை மீது நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கடிதம் எழுதியிருக்கிறார்கள். என்னை நேரில் சந்தித்தும் கேட்டுக் கொண்டார்கள். இன்னும் நடவடிக்கை எடுக்கவில்லை.

### நல்லோரை பாதுகாப்பது அரசின் கடமை

இருக்கிற சட்டத்தை பயன்படுத்தக்கூடாதா? (ஆம் என ராகவன் தலையசைத்தார்)

நன்றி, சட்டத்தை வாபஸ் வாங்காதேனன்று அர்த்தம்.

(சிரிப்பு)

அவர்களது சூழ்நிலை எப்படியாவது செய்துவிடவேண்டும் என்பதல்ல இப்படி எதையாவது செய்து அவமானத்தை உண்டாக்க வேண்டும். இதைத் தவிர வேறு நோக்கமே இல்லை. இது ஒரு அரசியலாகப் போய் விட்டது.

மற்றவர்கள் என்ன செய்யமுடியும்? ஆட்சியை நடத்தியாக வேண்டும். நல்லவர்களுக்குப் பாதுகாப்பு கொடுத்தாக வேண்டும்.

கையிலே கத்தியை வைத்துக் கொண்டு வெட்டவருகிறார். குத்தியும் விடுகிறார். அதைத் தடுக்க சட்டத்தைப் பயன்படுத்தாதே. அவரிடம் போய் தயவு செய்து குத்தியவரை போதும் குத்தாதே என்பது போல இருக்கிறது. இனி எத்தனை பேருக்கு உயிர் போகுமோ? அதைத் தடுத்து நிறுத்த வேண்டாமா?

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

முதல்வர் புரட்சித் தலைவர் விடுத்துள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:—

சத்துணவுத் திட்டப் பொறுப்பிலிருந்து தங்களை விடுவிக்குமாறு கோரியும், வேறு சில கோரிக்கைகளை முன் வைத்தும், தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணி இரண்டு நாட்களாக கிளர்ச்சி செய்து வருவது குறித்து மிகுந்த வேதனை அடைகிறேன்.

சத்துணவுத் திட்டப் பொறுப்பை ஏற்கவேண்டுமென்று ஆசிரியர்களைக் கட்டாயப்படுத்துவது அரசின் நோக்கமல்ல. அந்த அடிப்படையில் தான் ஒவ்வொரு தொடக்கப்பள்ளியிலும், இத் திட்டத்திற்கு முழுப் பொறுப்பையும் ஏற்கும் தனி பொறுப்பாளர் ஒருவரை நியமிக்க அரசு முடிவு செய்து, அதற்கான நடவடிக்கைகளையும் தீவிரமாக எடுத்து வருகிறது.

### நியாயமற்ற போராட்டம்

டிசம்பர் 15-ம் தேதிக்குள், இப்பணியை ஏற்க விரும்புவோர், மனுச் செய்துகொள்ள வேண்டுமென்று விளம்பரம் செய்யப்பட்டுள்ளது. வந்த மனுக்களைப் பரிசீலித்து, எப்படியாவது 1983-ஆம் ஆண்டு ஜனவரி 15 தேதிக்குள் இப்பொறுப்பாளர்களைப் பள்ளியில் நியமிக்க அரசு துரிதமான நடவடிக்கைகளை எடுத்து வருகிறது.

இந்த நிலைமையில் தங்களை விடுவிக்குமாறு கோரி, ஆசிரியர்கள் கிளர்ச்சிசெய்வது தேவையற்றது மட்டுமல்ல, நியாயமற்றதும் ஆகும்.

மதிய உணவுத் திட்டத்தைச் செயல்படுத்துவதால் பள்ளி மாணவர்களுக்கு கல்வி பயிற்றுவிக்கும் பொறுப்பு பாதிக்கப்படும் எனக் காரணம் காட்டி மதிய உணவுத் திட்டத்தைச் செயல்படுத்த மறுப்பவர்கள், கல்வி பயிற்றுவிக்கும் பொறுப்பை அசட்டை செய்து பள்ளிக்குச் செல்லாமல் ஆர்ப்பாட்ட நடவடிக்கைகளில் ஈடுபடுவதால் மட்டும் கல்வி பயிற்றுவிக்கும் தங்கள் பொறுப்பை எப்படி நிறைவேற்ற முடியும் என்பது புரியாத புதிராக உள்ளது.

### அரசு வாளாயிராது

கல்வி பயிற்றுவிப்பது தான் தங்கள் தலையாய பொறுப்பு என்று வாதிடுபவர்கள் இப்பொழுது வேலை நிறுத்தம் செய்வதன் மூலம் அப்பொறுப்புகளை அவர்கள் தட்டிக் கழிக்கிறார்கள் என்பதை மட்டும் ஏற்க ஏன் மறுக்கிறார்கள் என்பது புரியவில்லை. பள்ளிக் குழந்தைகள் கல்வி பெறும் வாய்ப்பு, ஆசிரியர்களின் இந்த வேலை நிறுத்தத்தால் பாதிக்கப்படும் நிலையை அரசு அனுமதிக்க முடியாது.

தன் உடல் நலக் குறைவையும் கருதாது கூட்டணி ஆசிரியர் தலைவர்களைத்தலைமை செயலாளர் பேச்சுக்கு அழைத்தபோது, கூட்டணி தலைவர் அதில் கலந்து கொள்ளாமல் வேறு இரு பிரதிநிதிகளை அனுப்பியதும் நிலைமையை விளக்கி தலைமைச் செயலாளர் கூறியதை ஏற்க மறுத்து, வேலை நிறுத்தத்தை மேற்கொண்டு நடத்த கூட்டணி முடிவு செய்ததும் வருந்துதற்குரியது மட்டுமல்லாமல், கண்டிக்கத் தக்கதும் ஆகும்.

தங்கள் நடவடிக்கைகளால் குழந்தைகளின் கல்வி பாதிக்கப்படுகிறது என்பதை உணர மறுத்து இந்த வேண்டுகோளையும் மீறி இவர்கள் வேலை நிறுத்தத்தைத் தொடர்ந்தால் ஏற்படும் விளைவுகளுக்கு இவர்களே பொறுப்பாவார்கள் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். அரசின் நல்லெண்ணத்தையும்பொது மக்களின் பொறுமையையும் ஆசிரியர்கள் இனியும் சோதிக்க வேண்டாமென்று அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் தமது அறிக்கையில் கூறி இருக்கிறார்.

## கலவரம் நடத்திய தி.மு.க.வினர்...

1-ம் பக்கத்தொடர்ச்சி)

வார்டில் அமைக்கப்பட்டிருந்த அலங்கார வளைவை தி.மு.க.வினர் தீயிட்டுகொளுத்திக் கொண்டிருந்தனர். தி.மு.க.வைச் சேர்ந்த காத்தவராயன் என்பவரும் அங்கு இருந்தார்.

### இந்திராவை கொளுத்துவோம் தி.மு.க. வெறிக் கூச்சல்

சி. வி. எம். அண்ணாமலை மற்றும் ராஜமாணிக்கம் ஆகியோர் சொன்னதன் பேரில்தான் தி மு கவினர் ஆங்காங்கே தீவைப்பு வேலையில் ஈடுபட்டனர்.

16-வது வார்டு அலங்கார வளைவை பெட்ரோல் வைத்து கொளுத்து என்று ராஜமாணிக்கம்கூறினார், அங்கே நின்று கொண்டிருந்த பக்தவத்சலம் என்ற மற்றொருவர் அலங்கார வளைவின் இடது புறமாக ஏறி தன் கையிலிருந்த சவப்பு டப்பாவிலிருந்த பெட்ரோலை ஊற்றி தீ வைத்தார்.

கிருஷ்ணமூர்த்தி என்பவர் வடபுறமாக ஏறி அங்கு கட்டப்பட்டிருந்த காங்கிரஸ் கொடியைப் பிடுங்கி கீழே எறிந்தார். தரையில் கிடந்த கொடியை தி.மு.க.வைச் சேர்ந்த தாடிக் கண்ணன் தீ வைத்துக் கொளுத்தி அலங்கார வளைவின் மீது எறிந்தார்.

### வளைவு எறிந்தது

இவ்வாறுபலர்தீவைத்ததும் அலங்கார வளைவு பற்றிக் கொண்டது. ராஜமாணிக்கம் தனது காரில் ஏறிக்கொண்டார்

அப்போது அவர் "இந்திரா இன்று தப்பி விட்டார். தேனம்பாக்கத்திற்கு சென்று எப்படியாவது அவரைக் கொளுத்தி விட வேண்டும்" என்று கத்தினார்.

கூட இருந்த தி. மு. க. வினரும் கூககுரலிட்டுக் கொண்டு அவரைத் தொடர்ந்தனர்.

இந்திராவுக்கு மிகப் பயங்கர ஆபத்து இருக்கிறது என்பதை உணர்ந்தேன்.

போலீசாருக்கு தகவல் சொல்லக்கூட முடியாத அளவிற்கு வழியெல்லாம் கலவரம் நடந்தது.

இவ்வாறு கருணாகரன் கூறினார்.

# அரசு சீட்டு கம்பெனி: ஏராளமானவர்களுக்கு வேலை வாய்ப்பு

**சென்னை, டிச 8- அரசு துவக்க இருக்கும் சீட்டு கம்பெனிகள் மூலம் இளைஞர்களுக்கு வேலை வாய்ப்பு கிடைக்க இருக்கிற தகவலை முதல்வர் புரட்சித்தலைவர் வெளியிட்டார்.**

'நியூஸ்டுடே' பத்திரிகை வெளியீட்டு விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் பேசுகையில் கூறியதாவது:—

மக்களுக்கு அத்தியாவசியமான தொழிலில் ஈடுபட்டிருப்பவர்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபடக்கூடாது என்ற அவசர சட்டத்தை மீண்டும் கொண்டு வந்ததற்கு என்ன காரணம்?

பஸ்சிலே கோடிக்கணக்கானவர்கள் பயணம் செய்கிறார்கள். அவர்களுக்கு வசதிகள் செய்து தரவேண்டாமா? அதை நிறுத்து என்று சொல்ல யாருக்கும் அதிகாரம் கிடையாது.

### பஸ்ஸை கொளுத்துவதா?

நான வேலை செய்ய மாட்டேன் என்னை வேலையிலிருந்து நீக்கு என்று கேட்க யாருக்கும் உரிமை இருக்கிறது.

இன்னொருவரை பயணம் செய்ய விடமாட்டேன் என்று சொல்ல யாருக்கு உரிமை இருக்கிறது?

அந்த மக்களின் வரிப் பணத்தை வைத்து தொழிலாளர்களுக்கு சம்பளம தரவேண்டும். அவர்கள் எங்கும் செல்ல உரிமை இருக்கிறது.

அந்த மக்கள் நினைக்கும் இடத்திற்கு பயணம் செய்ய முடியாது அப்படி வண்டி ஓட்டினால் டிரைவரையும சேர்த்து கொளுத்து வோம் என்றால் அவர்களைக் கைது செய்து நடவடிக்கை எடுக்க வேண்டாமா?

நாலே முக்கால் கோடி மக்களில் முக்கால் கோடிப் பேர் தொழிலாளிகள் என வைத்துக் கொள்ளுங்கள் 4 கோடி மக்கள் நிலை என்னாவது? அவர்கள் வரிகட்டுகிறார்களா இல்லையா?

### நம்பிக்கை காப்போம்

இவர்கள் வேலை நிறுத்தம் செய்தால் அததனை பேரும் பட்டினி கிடக்க வேண்டும். அலுவலகம் மூடப்பட வேண்டும். அத்தனை மக்களும் பயணம் செய்யக்கூடாது கொளுத்துவோம என்றால் அதை வேடிக்கை பார்ப்பதற்காகவா மக்கள் எங்களை ஆட்சிக்கு அனுப்பி யிருக்கிறார்கள்? எந்த நம்பிக்கையில் அனுப்பினார்கள்? அதை செய்யப் போனால் தொழிலாளர்களுக்கு விரோதிகள் என்பதா? சம்பளம் கொடுக்கவில்லையா? போனஸ் கொடுக்கவில்லையா?

வேலை நிறுத்தம் செய்ய உங்களுக்கு உரிமையிருக்கிறது என்றால் செய்யுங்கள் பஸ்சை மறிப்பதற்கு உங்களுக்கு உரிமை ஏது?

மக்கள் போவதைதடை செய்ய-மக்களுக்குதுணை நிற்கும் தொழிலாளர்களுக்கு ஆபத்து விளைவிப்பதை எப்படி அனுமதிக்க முடியும்?

சிறுபான்மை பிரிவிடம் பெரும்பான்மை பிரிவை ஒப்படைப்பதா? நாடு எங்கே போய் நிற்கும்?

இதற்கெல்லாம் உதவி செய்வது எது? பத்திரிகை. பத்திரிகைகளில் வரும் செய்தியை நம்பித் தான் மக்கள் செயல்பட வேண்டும்.

என்ன சொல்லுகிறார்கள்? இந்த சத்துணவு திட்டம் டிசம்பருக்கு பின் நடக்காது என்கிறார்கள். எவ்வளவு நல்ல எண்ணம் பாருங்கள், இந்த ராமச்சந்திரன் நடத்தவில்லை யென்றாலும் நாங்கள் நடத்துவோம் என்றல்லவா சொல்லவேண்டும்? நாட்டில் நல்லது நடக்க வேண்டும் என நினைப்பவர்கள் என்ன சொல்ல வேண்டுமோ அதை இந்த பத்திரிகை-டி. ஆர். ஆர். சண்முகவேல் சொல்கிறார்கள். உண்மையை சொல்லுகிறார்கள்.

சிலர் பல்லி விழுந்ததை சொல்லுகிறார்கள் பல்லியைக் கண்டுபிடிப்பது 9 முதல் 11 வயது பிள்ளைகள் தான். சமையல் செய்து போடுகிறவர்கள் சாப்பிட்டு விட்டு குழந்தைகளுக்குப் போட வேண்டும் என்று கூறியிருக்கிறோம்.

### நாட்டிற்கு நல்லதையே எழுதுவீர்

மைய சமையல் கூடத்தில் 5 ஆயிரம் அல்லது 10 ஆயிரம் பேருக்கு சமைக்க வேண்டுமானால் இரவு 2 மணிக்கு துவங்கினால்தான் காலையிலிருந்து பள்ளிகளுக்கு சாப்பாடு அனுப்ப முடியும் கடைசியாக இருக்கும் பள்ளிக்கு சாப்பாடு போய் சேருவதற்கும் 3 மணி ஆகிவிடும். அதனால்தான் அங்கேயே பள்ளிகளில் சமைத்துப் போட வேண்டும் எனக் கூறினோம.

பத்திரிகைகளில் மக்களுக்கு சொல்ல வேண்டியதை எழுதுங்கள் எத்தனை பேருக்கு அரசு எந்த வகையில் வேலை கொடுக்க விரும்புகிறது? யார் யார் எங்கு போய் வேலையை மனுக கொடுத்து பெற்றுக் கொள்வது என்பது பற்றி கட்டுரை எழுதினால் அது நாட்டுக்காக உழைப்பதாக அமையும்.

### சத்துணவு: ஜஸ்டிஸ் கட்சியினர் எண்ணக்கூடாதா?

சத்துணவுத் திட்டம் பற்றிப் பேசிய போது 1920ம் ஆண்டு சென்னையின் பிரசிடெண்டாக இருந்த சர். தியாகராயர் ஒரு பள்ளியில் மதிய உணவை அறிமுகப்படுத்தினார் என்றேன். ஜஸ்டிஸ் கட்சியாக இருந்தால் அவர்கள் பசியைப் பற்றி நினைக்கமாட்டார்களா?

இன்னார் தான் இதை நினைக்க வேண்டும்என்று அக்ரிமெண்டா போட்டிருக்கிறோம்?

62 ஆண்டுகளுக்கு முன்பு ஒருவருக்கு தோன்றியிருக்கிறது ஏழை குழந்தைகளுக்கு உணவு கொடுக்க வேண்டும் என்று.

அதை எடுத்துச் சொன்னால் எந்தக் கட்சியாக இருந்தால் என்ன? ஜஸ்டிஸ் கட்சியாக இருந்தால் என்ன? காங்கிரஸ் கட்சியாக இருந்தால் என்ன? அல்லது எந்தக் கட்சியாக இருந்தால் என்ன?

தியாகராயர் இறந்து போன பிறகு 5 பள்ளிகளில் போட்ட உணவு திட்டம் நின்று போன பிறகு மாணவர்கள் எண்ணிக்கை குறைந்தது. பிற்படுத்தப்பட்ட சமூகத்தினர் எண்ணிக்கை குறைந்தது. அவர்கள் வேலைக்கு போய்விட்டார்கள்.

பிறகு கதர் துணியும் வாங்கிக் கொடுத்து மறுபடியும் அறிமுகப் படுத்தினார்கள். அதைச் சொன்னால் இதற்கு ஒரு கடிதம் உடன் பிறப்புகளுக்கு.

(கைதட்டல் சிரிப்பு)

ஜஸ்டிஸ் கட்சியை மற்றவர்கள் திட்டுவதற்கு நான் இதையெல்லாம் சொல்கிறேனாம்.

வேறொருவர் சிறுபிள்ளைத்தனமாக எம்.ஜி.ஆர். சொல்கிறார் என்கிறார். அவருக்கு என்னைவிட வயது அதிகம். ஆதாரத்தோடு சொல்கிறேன். புகைப்பட நகல் இருக்கிறது என்றால் எதற்கு இதெல்லாம் என்கிறார்.

சோழர் காலத்திலேயே இருந்தது என்கிறார் ஒருவர். யார் இல்லையென்று சொன்னது?

### எழுச்சிமிகு எதிர்கால சந்ததி

இல்லையென்றால் வள்ளலார் பாடுவாரா? "உடுக்கவோ ஒருகந்தைக்கு மேலில்லை. உண்ணவோ உணவுக்கும் வழியில்லை; படுக்கவோ பழம் பாய்க்கும் கதியில்லை, என்று அப்பவும் இருந்தது இப்பவும் இருக்கிறது.

தியாகராயர் 5 பள்ளிக்கு போட்டார். நீங்கள் 5000 பள்ளிக்கு போட்டீர்கள். நான் இப்போது 65 லட்சம் குழந்தைகளுக்கு போடுகிறேன். வேறொருவர் ஒன்றரைகோடி குழந்தைகளுக்கு போடலாம். போடட்டுமே எப்படியோ ஏழைக் குழந்தைகள் சாப்பிடுகிறார்கள. ஊட்டச் சத்தோடு இருக்கிறார்கள்

நாளைய உலகம் தமிழுலகம் நல்ல வாலிபாகளை — இளைஞர்களைக் கொண்டு இருகக வேண்டும் என்பதுதானே நமக்குத் தேவை?

### மனமிருந்தால் மார்க்கமுண்டு

குடும்பத்திற்கு ஒருவருக்கு வேலை என்று சொன்னோம். இப்போது 33 ஆயிரத்து 500 பேருக்கு சத்துணவு திட்டத்தில் வேலை தரப் போகிறோம்.

சீட்டுக் கம்பெனி ஆரம்பிக்க இருக்கிறோம். அதில் எவ்வளவு பேருக்கு வேலை தரவேண்டும் என்பதை எண்ணிப் பாருங்கள்.

அந்த ஊர்களில் கிடைக்கும் மூலப் பொருட்களை வைத்து ஆங்காங்கு என்னென்ன தொழில்களைத் துவக்க முடியும் என்று திட்டமிட இருக்கிறோம.

20 அம்சத் திட்டத்தின் மூலம் வேலை வாய்ப்பு கொடுத்தால் மத்திய அரசு அதில் பாதியளவு ஏற்றுக் கொள்கிறது. எதற்கும் மனம் இருந்தால் மார்க்கம் உண்டு.

இவ்வாறு முதலவர் புரட்சித்தலைவர் பேசினார்.

## புரட்சித் தலைவர் எச்சரிக்கை...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

ஜெயிலுக்குப் போனால் புதியவர்களை வைத்து கல்வி கற்றுக் கொடுப்போம். அத்தியாவசிய சேவைகள் என்று ஒரு சட்டம் இருக்கிறது.

இரு நாட்களாக மன்னித்து விட்டிருக்கிறோம் தண்டனை கிடையாது, நடவடிக்கை கிடையாது, நாளைக்கு வந்தால்...

### பத்திரிகை தர்மம்

இதை பத்திரிகைகளில் பாருங்கள், ஒவ்வொருவர் ஒவ்வொரு மாதிரி வெளியிடுவார்கள்.

அப்போதுதான் டி. ஆர். ஆர். சண்முகவேலுவை நான் நினைக்க வேண்டியிருக்கிறது. இந்த மாதிரி விஷயங்களில் உண்மையைச் சொல்ல பத்திரிகைகள் வேண்டாமா? எங்கே உண்மையைச் சொல்லுகிறார்கள்? அதற்கு அவர்கள் தனி ஒரு அகராதியை வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

பத்திரிகைக்கென்று தர்மம் இருக்கிறது. ஆளுக்கு ஆள் ஒவ்வொரு மாதிரி வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

தலைவர் (ராகவன்) பேசும்போது "மோனாப்பலி" இருக்கக்கூடாது, ஒருவரிடம் 40,50 பத்திரிகை இருக்கக்கூடாது என்றார்.

இது நியாயம் தான், இந்தப் பககம் ஒரு புத்தகம், அதில் சங்கராச்சாரியார் படம், மற்றும் ஏதேதோ படம் வைத்திருப்பது, வேறொரு பக்கம் ஏதேதோ வருகிறது. உள்ளே பார்த்தால் தமிழ் அழகாக எழுதப் பட்டிருக்கிறது, குழந்தை பெறாமலிருப்பதற்கு என்ன வழி என்பதற்கு காமசாஸ்திரத்தையா எழுதணும்?

சென்னை யாருக்கு என்ற பிரச்சினை வந்த போது தமிழில் நடத்திய பத்திரிகையில் சென்னை தமிழர்களுக்கேசொந்தம் என்று வெளியிட்டது ஒரு பத்திரிகை. இப்போதும் இருக்கிறது. ஆந்திராவில் ஐதராபாத்திலிருந்து வந்த அதே முதலாளி நடத்திய தெலுங்கு பதிப்பில் 'மதராஸ் மனதே' என்று வந்தது.

என்ன ஆகும்? ஜாதியைப்பற்றி சொன்னாலே தகராறு வருகிறது. இவ்வளவு பெரிய நகரத்தை வரலாற்று சிறப்புமிக்க நகரத்தை இரு மாநிலங்களுக்கிடையே யாருக்கு சொந்தம் என்ற பிரச்சினையில் ஒரே முதலாளி இரண்டு பத்திரிகை நடத்தி அந்த மொழிக்காரர்களுக்கு தேவையானதை எழுதி பணத்தை சம்பாதித்தார் என்றால் எங்கே ஒருமைப்பாடு வரும்? இந்த முதலாளிகளை என்ன செய்யலாம் என பத்திரிகை நண்பர்கள் தான் சொல்லவேண்டும்.

### ஏற்றத்தாழ்வற்ற சமுதாயம்

இந்தியத் துணைக் கண்டம் முழுதுமே இவைகளுக்கு ஒரு விதிமுறை கொண்டு வந்து சட்டத்திலே சேர்த்தால் அவர்களை நான் கையெடுத்துக் கும்பிட்டு பாராட்டுவேன்.

நாடு உண்மையோடு இருக்க வேண்டுமானால், பேதமற்ற ஏற்றத்தாழ்வற்ற சமுதாயத்தை அமைக்க வேண்டும். மக்களில் ஏற்றத் தாழ்வு கூடாது என்று சொல்கிற டி. ஆர். ஆர். 400 பத்திரிகை ஆரம்பிக்கட்டும்.

### இதுதான் ஒருமைப்பாடா?

ஆனால் தெலுங்கிலே போனால் ஆந்திரர்களுக்கு வேண்டியதைச் சொல்லி தமிழர்களுக்கு எதிரானதைச் சொல்லுவது, கர்நாடகத்திற்குப் போனால் தண்ணீர் கொடுக்காதே என்பது, இங்கே தண்ணீர் நமக்குச் சொந்தம்கொடுத்துதான்

(1-ம் பத்தி பாக்க)

# ரூ. 3 லட்சம் சிலை திருடி வெளிநாடு கடத்த முயற்சி

### ஆந்திர ஆசாமிகளை சென்னை போலீஸ் பிடித்தது

**சென்னை, டிச 8. ரூ. 3 லட்சம் மதிப்புள்ள சிலைகளைத் திருடி வெளிநாட்டுக்கு கடத்த முயற்சித்ததாக சென்னையில் 2 ஆந்திர ஆசாமிகள் கைது செய்யப்பட்டனர்.**

ஆந்திர மாநிலம் கடப்பை என்ற ஊரைச் சேர்ந்தவர் போகுல நாகி ரெட்டி வயது 28

நெலலூரைச் சேர்ந்தவர் ரவீந்திர ரெட்டி இவர்கள் இருவரும் சென்னைக்கு ஒரு சாக்கு மூட்டையுடன் வந்தனர்

பழவந்தாங்கல் ரெயில் நிலையத்தில் இறங்கி சைக்கிள் ரிக்ஷாவில் பயணம் செய்ப போம் நடததிக் கொண்டிருந்தனர்

அப்போது அந்த வழியாக வந்த பரங்கிமலை போலீஸ் இன்ஸ்பெக்டர் கலியமூர்த்தி, இருவரையும் விசாரித்தார் அவர்களுக்குத் தமிழ் தெரியாததால் தெலுங்கில் ஏதேதோ பேசினா

சாக்கு மூட்டையை இன்ஸ்பெக்டர் பிரித்துப் பார்த்தார்

உள்ளே பஞ்சலோகத்தால் ஆன 3 சாமி சிலைகள் இருந்தன

வரதராஜ பெருமாள் சிலை 38 செண்டி மீட்டர் உயரம் உள்ளது, எடை 4.5 கிலோ,

அடுத்தது பூதேவி சிலை, 32 செண்டிமீட்டர் உயரம் எடை 3.5 கிலோ

மற்றொன்று ஸ்ரீதேவி அம்மன் சிலை உயரம் 32 செண்டி மீட்டர். எடை 3.5 கிலோ

இவற்றை போலீசார் கைப்பற்றினர் 2 ஆசாமிகளும் கைது செய்யப் பட்டனர்

இந்த சிலைகள் வெளி நாட்டுக்கு கடத்தப்பட இருந்தவை என்று தெரிகிறது கடத்தல் கோஷ்டி தலைவன் யார் என்பது தெரியவில்லை அவரைப் போலீசார் தேடி வருகிறார்கள்

இந்தச் சிலைகள் தமிழ் நாட்டுக் கோவில்களிலிருந்து திருடப் பட்டவையா? அல்லது ஆந்திர மாநில கோவில்களில்திருடப்பட்டவையா என்பது பற்றி போலீசார் புலன்விசாரணை நடத்தி வருகிறார்கள்

இதற்காக புதை பொருள் ஆராய்ச்சி நிபுணர்களின் உதவியை போலீசார் நாடி உள்ளனர்.

செங்கற்பட்டு மாவட்ட கிழக்குப்பகுதி போலீஸ் சூப்பிரண்டு ரமணன் உத்தரவின் பேரில் மேலும் தீவிர புலன் விசாரணை நடத்தி வருகிறார் இன்ஸ்பெக்டர் கலியமூர்த்தி.

திண்டுக்கல்லில்

கழக தொழிற் சங்க

## கொடியை கே. ஏ. கே ஏற்றி வைத்தார்

திண்டுக்கல், டிச.8 — திண்டுக்கல்லில் மணிக்கூண்டு தொழிற் சங்க அலுவலகத்தில் கழக தொழிற் சங்கக் கொடி ஏற்றி வைக்கப்பட்டது.

அமைச்சர் கே.ஏ.கே. கொடியை ஏற்றி வைத்தார். விழாவுக்கு வி.ஜெயராமன் தலைமை வகிக்க சு.முத்துகோபால் முன்னிலை வகித்தார்.

மதுரை புறநகர் மாவட்ட செயலாளர் இரா. முத்தையா எம்.எல்.ஏ. திண்டுக்கல் நகர செயலாளர் சீனிவாசன் சிவநாதப்பாபு, பிச்சை, பெரியசாமி, செபஸ்தியான், வேளாங்கண்ணி, இப்ராகிம், மூர்த்தி, குணசேகரன், ஜோசப் ஆகியோர் கலந்துகொண்டனர்.



பத்திரிகை சட்டம் பற்றி இன்று பேசுவோர்

# பழைய அரசு கொண்டு வந்த சட்டம் பற்றி மவுனம் ஏன்?

## முதல்வர் புரட்சித்தலைவர் கேள்வி

**சென்னை, டிச. 8- கழக அரசு கொண்டு வந்த பத்திரிகைச் சட்டம் பற்றிப் பேசுகிறவர்கள்; இதற்கு முன்பிருந்தவர்கள் கொண்டு வந்த சட்டம் பற்றி ஏன் பேசவில்லை என்று முதல்வர் புரட்சித்தலைவர் கேட்டார்.**

'நியூஸ் டுடே' என்ற ஆங்கில மாலை பதிப்பு பத்திரிகையை முதல்வர் புரட்சித்தலைவர் சென்னையில் வெளியிட்டார்.

முதல் பிரதியை நேஷனல் ஹெரால்டு பத்திரிகையின் முன்னாள் ஆசிரியர் எம். சலபதி ராவ் பெற்றுக்கொண்டார்.

இந்த விழாவுக்கு அகில இந்திய உழைக்கும் பத்திரிகையாளர் சங்கத்தின் தலைவர் ராகவன் தலைமை வகித்தார். விழாவில் அமைச்சர்கள் கே.ஏ.கே., ஆர்.எம்.வீ., ராகவானந்தம், திருநாவுக்கரசு, மற்றும் ஜி. விஸ்வநாதன் எம்.எல்.ஏ., டி. ஆர். ராமசாமி ஆகியோர் பேசினர்.

பத்திரிகையை வெளியிட்டு முதல்வர் புரட்சித் தலைவர் பேசுகையில் கூறியதாவது:—

இந்திய துணைக் கண்டத்தில், நான் கேள்விப்பட்டது-படித்தது சரியென்றால் 1780ம் ஆண்டுதான் முதன் முதலாக பத்திரிகை என ஆங்கிலேயர்களுக்காக ஆங்கிலத்தில் கல்கத்தாவில் வெளியிடப்பட்டது. 'பெங்கால கெசட்' என்ற பெயரில். அதன் சக்தியை உணர்ந்த பின்தான் பல்வேறு பத்திரிகைகள் துவங்கியது என்பது வரலாறு.

ஏறத்தாழ 202 ஆண்டுகளுக்கு முன்பு பத்திரிகை துவங்கப்பட்டது. அந்தக் காலத்தில் எழுதப் படிக்கத்தெரியாத மக்கள் இருந்தபோது ஆங்கிலேயர்களுக்காக ஆங்கிலப் பத்திரிகை துவங்கப்பட்டது. இன்று தமிழர்களுக்காக ஆங்கில பத்திரிகையை துவக்குகிறோம்.

### துணிச்சலான செயல்

ஏன் அத்தகைய நிலைமை, தமிழகத்தில் மட்டுமல்ல. இந்திய துணைக்கண்டம் முழுவதும் இருக்கிறது என்பதை எண்ணிப்பார்க்க கடமைப்பட்டிருக்கிறோம்.

இன்றைய தினம் துணிச்சலோடு மாலை ஆங்கிலப் பத்திரிகை வெளியிடும் முயற்சியில் நண்பர்களின் உதவியோடு இறங்கி இருக்கிறார்கள்.

என் அறிவுக்கு தெரிந்த வரை, வேறு எந்த பத்திரிகையை நடத்துபவர்களும் சரி இப்படி தன்னோடு உழைப்பவர்களின் நம்பிக்கையைப் பெற்று, ஆதரவைப் பெற்று 'நாங்கள் எங்கள் தோழர்களுடைய உழைப்பிலே தான் வெற்றி காணுகிறோம்' என்ற மனப்பக்குவத்தை வேறு யாராவது பெற்றிருக்கிறார்களா என்றால் வேறு எந்த பத்திரிகையை சேர்ந்தவர்களிடமும் காணமுடியாது என எண்ணுகிறேன்.

கடந்த 10 ஆண்டுகளாக தங்களுக்கு கிடைத்த லாபத்தை நண்பர்களுடன் பகிர்ந்துக் கொண்டு இப்போது 'நியூஸ் டுடே' என்ற பத்திரிகையைத் துவக்கியிருக்கிறார்கள்.

டி. ஆர். ஆர்., சண்முகவேல் நியூஸ் தான் தருவார்கள். நாம் தான் அதில் வியூஸ் தெரிந்து கொள்ள வேண்டும். அவர்கள் திறமை அது தான்.

பத்திரிகை சட்டத்தைப் பற்றி பேசுகிறார்கள். நண்பர் ராகவன் ஒருகருத்தைச் சாமர்த்தியமாகச் சொன்னார். 'காங்கிரஸ் ஆட்சி நடக்கிற மாநிலங்களிலெல்லாம் இப்படி இருக்கிறது. காங்கிரஸ் ஆட்சி அல்லாத மாநிலத்தில் கொண்டு வந்து விட்டார்கள் என்ற கெட்ட பெயர் உங்களுக்கு ஏன்? வாபஸ் வாங்கிக்கொள்ளுங்கள்' என்றார்.

இந்த சட்டம் மக்கள் குரலைத் தொட்டதா? தினமணியைத் தொட்டதா இந்துவைத் தொட்டதா? எக்ஸ்பிரசைத் தொட்டதா? தமிழகத்தில் எந்தந்த பத்திரிகையைத் தொட்டது?

### பொய்யையே மூலதனமாக கொண்டவர்கள்

தவறான செய்திகளை — உண்மைக்கு மாறாக— தலைகுனியும் படியாக செய்திகளை, அதிலும் நீதிபதிகள் கூட வழக்குப் போடபயந்து அங்கே வந்து என்னென்ன கேள்வி கேட்பார்களோ என்று அஞ்சி ஒதுங்கிப் போகிற நிலையில் இச்சட்டம் வந்தது.

நாட்டை ஆளுகிற நாங்கள் பொறுப்பாளர்கள் அல்ல என்று கூறி தப்பித்துக் கொள்ள நாங்கள் தயாராக இல்லை. என்றாலும் நாங்கள் நினைத்ததை நடத்திக் காட்டுவதற்கு இதற்கு முன் ஆட்சி நடத்தியபோது அதையும் நடத்தி இப்போது பதவியில் இருக்கிறார்களே —52 வயது வரை பதவியிலிருக்க உரிமை பெற்றவர்கள். அந்தசெயலர்களைப் பற்றி இதைத்தான் எழுதுவது என்பதில்லை.

அவர்களின் மனைவியைப் பற்றி எழுதுவது. அவர்களின் திருமணமான குழந்தைகளைப் பற்றி எழுதுவது, குடும்பத்தைப் பற்றி எழுதுவது வழக்குப் போடலாமா என செயலர்களைக் கேட்டால் 'வேண்டாம் இன்னும் என்னென்ன கேட்பார்களோ' என அச்சப்படுகிறார்கள்.

இந்த அச்சத்தைமாற்ற என்ன வழி என்று யாராவது சொல்லுகிறார்களா என பல நண்பர்களைக் கேட்டேன். பல பத்திரிகை நண்பர்களைக்கேட்டேன் இதற்கு ஒருவழி சொல்லுங்கள் என்று.

நியாயமாக பணியாற்றுகிற, ஒழுங்காக செயலாற்றுகின்றவர்களின் மானத்தை-மக்கள் அவர்களை கேவலமாக நினைக்கக்கூடிய முறையில் செய்திகளை வெளியிடுகிறார்களே அதை தடை செய்வதற்கு உங்கள் அமைப்பு, பத்திரிகை நிருபர்கள், ஆசிரியர்கள் அமைப்பு என்ன நடவடிக்கை எடுக்கப்போகிறது. தவறு செய்பவர்கள் மீது என்ன நடவடிக்கை? என்ன தண்டனை என்று கேட்டேன்.

அதனால்தான் நண்பர் வீரப்பன் கூறினார். பத்திரிகையாளர்களிடமிருந்து மக்களுக்கு சுதந்திரம் தேவை. அவர்களைக் காப்பாற்ற நடவடிக்கை தேவை என்று.

நான் டெல்லியில் பத்திரிகையாளர்கள் கேட்டபோது சொன்னேன். இதற்குயாராவது பொறுப்பேற்றுக் கொண்டால் இந்த சட்டம் கொண்டு வரவேண்டிய அவசியமில்லை.

யாரையும் அச்சுறுத்தி ஆட்சியை நடத்திவிட முடியும் என்ற பைத்தியக்கார நம்பிக்கை என்னிடம் இல்லை. நான் எனக்கு கருத்து தெரிந்த வயதிலிருந்து அரசியலைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். காங்கிரசில் உறுப்பினராக இருந்த காலத்திலிருந்து பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

இப்போது நாங்கள் கொண்டு வந்த சட்டத்தைப் பற்றி பேசுபவர்கள் இதற்கு முன்பு இருந்தவர்கள் கொண்டுவந்த சட்டத்தைப் பற்றி ஏன் பேசவில்லை?

இந்திய அரசியல் அமைப்பு சட்டத்தில் இதற்கென்று ஏதாவது வரைமுறை — விதிமுறை இருக்கிறதா? தலைவரை கேட்கிறேன்?

(இல்லை என்று ராகவன் தலையாட்டினார்)

இல்லை. சோவியத் ரஷ்யாவில் இருக்கிறது. அந்த சட்டத்திற்கு உட்பட்டு அவர்கள் சேவை செய்ய வேண்டும் அரசியலுக்கு. அவர்கள் கொள்கைக்கு ஏற்பத் தான் அவர்கள் நடக்க வேண்டும்.

### துப்பறியும் இயக்கம்

ஆனால் அமெரிக்காவில் அப்படியல்ல. தனி மனிதன் சுதந்திரத்திற்காக ஒரு பத்திரிகை நடத்த முடியும். நடவடிக்கை எடுகக முடியும்.

வாட்டர் கேட் பிரச்சினையில் ஒரு ஜனாதிபதியே வெளியே போக வேண்டிய நிலை ஏற்பட்டது. அந்த அளவு பத்திரிகையாளர்களுக்கு அங்கே சக்தி இருக்கிறது. அப்படியென்றால் என்ன அர்த்தம்? அவர்கள் அந்த அளவு மூளையை பயன்படுத்துகிறார்கள். ஆய்வும் செய்கிறார்கள். துப்பறிகிறவர்களைப் போல செயல்படுகிறார்கள். எதையும் மறைத்துவிட முடியாது என்கிற அச்சம் பொறுப்பில் உள்ளவர்களிடம் இருக்கிறது.

இங்கே இருக்கிற பத்திரிகையாளர் களெல்லாம் சேர்ந்து ஒரு துப்பறியும் இயக்கமே வைத்துக் கொள்ளுங்களேன். என்னையும் சுற்றி தப்பு இருக்கிறதா எனக் கண்டு பிடிக்கலாம். மற்றவர்களைச் சுற்றி தப்பு இருக்கிறதா என கண்டு பிடிக்கலாம். வெளியே சொல்லுங்கள்.

ஆனால் எதைச் சொல்லுகிறீர்கள்? ராமச்சந்திரன் கோவாவுக்கு போனான் என்று எழுதுகிறீர்கள், நான் கோவாவுக்கு போகவில்லை. இதைப்பற்றி தானே எழுதுகிறார்கள்.

நான் 3 கோடி ரூபாய் வாங்கினேன் என எழுதலாம். அதை நிரூபி என்றால் சர்வாதிகாரம், ஜனநாயகம் அல்ல. மக்கள் உரிமையை பறிக்கும் செயல் என்கிறார்கள். இது என்ன நியாயம்? இதற்கு ஒரு வரைமுறை வேண்டாமா?

எங்களிடம் குறை ஏற்படும்போது டி.ஆர்.ஆர். சுட்டிக்காட்டாமல் இருந்திருக்கிறாரா என எண்ணிப்பாருங்கள். எங்கே சுட்டிக் காட்ட வேண்டுமோ அங்கே சுட்டிக் காட்டியிருக்கிறார்.

### கொள்கைவேறு நட்புவேறு

சமீபத்தில் ஒரு கடிதம் எழுதியிருந்தார். அதை நான் படித்தவுடன் 'மக்கள் குரல்' தானா என்று நினைத்தேன். யோசித்து பார்த்த பிறகு அது சரி தான் என்றுபட்டது.

நான் என்னோடு பழகிய எந்த பத்திரிகை நண்பரானாலும் சரி அவருடைய சொந்தக் கருத்தில் நான் குறுக்கிடுவது கிடையாது. நட்புவேறு கொள்கை வேறு.

என்னுடைய கொள்கையை ஏற்றுக் கொண்டவர் தான் நண்பராக இருக்கமுடியும் என்றால் நானும் உமாபதியும் நண்பர்களாக இருக்க முடியாது. அவருக் கென்று ஒரு கொள்கை, தலைவர் உண்டு. 1935-36ம் ஆண்டிலிருந்து இன்றும் நண்பர் தான்.

கொள்கை என்பது அவரவர் நம்பிக்கைக்கு எடுத்துக் காட்டே தவிர எதிரியாக்கிக் கொள்ள அல்ல.

நோக்கம் இந்த நாட்டினுடைய முன்னேற்றம். இதை தான் அவரவர்கள் கருத்துப்படி வெளியிடுகிறார்கள். இதைப் போய் எப்படி குறை சொல்வது?

நேற்று சொன்ன கருத்து இன்று தவறாக மாறலாம். நேற்று தவறாக இருந்தது இன்று சரியாக இருக்கலாம்.

டாங்கே மிகப்பெரிய அறிவாளி. கம்யூனிஸ்டு கட்சி தலைவர் 2 ஆண்டு பொறுப்பில் பணியாற்றிக் கொண்டிருந்தார். அதன் பிறகு கட்சிக் கூட்டத்திலேயே தான் வேண்டுமா, வேண்டாமா என்ற நேரத்தில் அவர் பேசினார். "நான் இரண்டாண்டு நடத்திச் சென்றது தவறான வழி. நான் தவறு செய்து விட்டேன் வேறொருவரைத் தேர்ந்தெடுங்கள்" என்றார்.

2 ஆண்டு அவர் சொன்ன யோசனையின் படிதான் கட்சி நடந்திருக்கிறது. அது தவறாக இருந்திருந்து கட்சி அழிந்திருந்தால் என்ன ஆகும்? இதையே ஒரு ஆட்சியாகவைத்துப் பாருங்கள்.

5 ஆண்டுகளுக்கு ஆட்சி செய்ய மக்கள் தேர்ந்தெடுக்கிறார்கள். அடுத்த 5-வது ஆண்டில் மக்கள் மீண்டும் தேர்ந்தெடுக்கிறார்களோ இல்லையோ முன்பு இருந்தவர்கள் அந்த 5 ஆண்டில் தவறு செய்து விட்டால் நாட்டின் முன்னேற்றம் எவ்வளவு பாதிக்கப்படும்?

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

---

தமிழ்நாடு - கர்நாடக மாநிலங்களிடையே

## சரக்கு வண்டிகளுக்கு கூடுதல் ஒதுக்கீடு

சென்னை, டிச. 8. சரக்கு வண்டிகள் அனுமதி மீது மேலொப்பம் இடுவதற்காக தமிழ்நாட்டிற்கும் கர்நாடக மாநிலத்திற்கும் ஏற்கனவே ஒப்பந்தம் செய்யப்பட்டுள்ளது. தற்போதுள்ள ஒப்பந்தத்தின் படி இரு மாநிலங்களும் 2250 சரக்கு வண்டிகளுக்கான அனுமதி மீது மேலொப்பம் இடலாம். இந்த ஒதுக்கீடு இப்போது முழுவதும் செய்யப்பட்டுவிட்டது.

பொதுமக்களிடமிருந்து மேலும் சரக்கு வண்டிகள் அனுமதி வேண்டுமெனக் கோரி முறையீடு மனுக்கள் வந்தன. இந்த மனுக்கள் மீது தமிழக அரசும் கர்நாடக அரசும் கலந்து ஆலோசித்து இதனை 3000 என்று அதிகரிக்கலாம் என்று தற்போது முடிவு செய்யப்பட்டுள்ளது. இந்த ஒப்பந்தம் 1. 12. 1982 முதல் நடைமுறைக்கு கொண்டு வரப்பட்டது.

---

கருணாநிதி மீது

குற்றஞ்சாட்டி

## தி. மு. க. பிரமுகர் ராஜிநாமா

சென்னை, டிச. 8— சென்னை மாவட்ட தி. மு. க. பிரதிநிதியும், முன்னாள் பொருளாளருமான ஓ. எஸ். பாலசுந்தரம் தி. மு. க. விலிருந்து ராஜினாமா செய்தார். கடந்த 20-ந்தேதி நடந்த மாவட்ட தி. மு. க. நிர்வாகிகள் தேர்தலில் பொருளாளர் பொறுப்புக்காக போட்டியிட்ட என்னை கழகத் தலைவர் கருணாநிதியே தோற்கடித்தார். எனவே தி.மு.க. கழகத்திலிருந்து நான் விலகிக் கொள்கிறேன் என்று அவர் தன் அறிக்கையில் கூறியுள்ளார்.

---

## இசை விழா

சென்னை, டிச. 8— இந்தியன் பைன் ஆர்ட்ஸ் சொசைட்டியினர் தங்களது 50-வது தங்க விழா ஆண்டை முன்னிட்டு இம்மாதம் 17-ம் தேதி முதல் அடுத்த மாதம் 2-ந் தேதி வரை இசை விழா நடத்துகின்றனர். இந்த விழா சுவாமி சங்கரதாஸ் கலையரங்கில் நடைபெறுகிறது.

விழாவை ஆளுநர் குரானா துவக்கி வைக்கிறார். இந்த இசை விழாவில் வீணை எஸ் பாலசந்தர், ஜேசுதாஸ், குன்னக்குடி வைத்தியநாதன், மதுரை சோமு, செம்மங்குடி சீனிவாச அய்யர், சாம்பசிவம், ஹைரான் ராமசாமி, குமாரி பத்மா சுபரமணியம், குமாரி ஜெயந்தி, குமாரி சாந்தினிகோபால் ஆகியோரின் இசை, நடன, நாடக நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன.

---

## ஆட்டோ ரிக்ஷாவில் பெண் கடத்தல்

பெங்களூர், டிச. 8— கணவனும் மனைவியும் தங்களது வீட்டில் இருந்த போது ஒரு கோஷ்டியினர் தம்பதிகள் இருவரையும் மிரட்டி ஆட்டோ ரிக்ஷா ஒன்றில் கடத்திச் சென்றார்கள்.

பெங்களூர் பன்னர் காட்டா பகுதியில் இந்தச் சம்பவம் நடந்தது. சத்தம் போட்டால் குத்திக் கொலை செய்துவிடுவோம் என்று அந்தத் தம்பதிகளை அந்தக் கோஷ்டி மிரட்டியதாம்.

போகும் வழியிலேயே கணவனை அந்தக் கோஷ்டியினர் உதைத்துக் கீழ தள்ளிவிட்டு மனைவியைக் கடத்திச் சென்று விட்டதாகக் கூறப்படுகிறது. அந்தப் பெண்ணின் கதி என்னவாயிற்று என்று தெரியவில்லை.

பெங்களூர் போலீசார் இது குறித்து தீவிரமாக புலன் விசாரணை செய்து வருகிறார்கள்.

---

பாண்டிச்சேரியில்

# இ. காங்கிரஸ் ஆதரவு இன்றி அரசு இருக்காது

## புதுவை இ. காங்கிரஸ் தலைவர் அறிவிப்பு

பாண்டிச்சேரி, டிச 8- "இ காங்கிரஸ் ஆதரவு இல்லாமல் பாண்டிச்சேரியில் நிலையான அரசு இருக்காது" என்று பாண்டிச்சேரி இ. காங்கிரஸ் தலைவா பி சண்முகம் கூறினார்.

புதுவையில் தி. மு. க. மந்திரிகள் ஊழலால் புதுவை அரசுக்கு கெட்ட பெயர் ஏற்படுகிறது என்று இ. காங்கிரஸ் தலைவர்கள் கூறிவருவது தெரிந்ததே.

இ. காங்கிரஸ் இல்லாமலே தி. மு. க. ஆட்சி அமைக்கும் என்று கூறி தி. மு. க.வினரும் ரகசியமாக வேலை செய்து வந்தனர்.

பாண்டிச்சேரியில் நடந்த பிரதமர் இந்திரா காந்தி பிறந்த தினவிழா பொதுக் கூட்டத்தில் இ. காங்கிரஸ் தலைவர் பி. சண்முகம் பேசும்போது சில கட்சிகள் தாங்களே தனியாக ஆட்சி நடத்திக் கொள்வோம் என்று பேசிக்கொள்கிறார்கள். இந்தப் பேச்சு அரசியல் உள்நோக்கம் கொண்டதாகும். பாண்டிச்சேரியில் அரசு நடக்கவேண்டுமானால் இ. காங்கிரசின் ஆதரவு தேவை. காங்கிரஸ் ஆதரவின்றி இங்கே நிலையான அரசு அமைக்க முடியாது" என்று குறிப்பிட்டார்.

இதுபற்றி தி. மு. க. முதலவர் டி. ராமச்சந்திரனிடம் நிருபர்கள் கேட்டபோது கருத்துச் சொல்ல மறுத்து விட்டார். இது அவர்கள் கட்சியின் கருத்தாகஇருக்கலாம் என்று மட்டும் பதிலளித்தார்.

இ காங்கிரசில் இருந்து

## முன்னாள் மத்திய மந்திரி நீக்கம்

புதுடெல்லி, டிச. 8— குஜராத் மாநிலத்தில் இந்திரா காங்கிரஸ் கட்சியில் கருத்து வேறுபாடு ஏற்பட்டு உள்ளது தெரிந்ததே.

அதிருப்திக் குழுவுக்கு தலைவர் எனக் கருதப்படும் முன்னாள் உதவி நிதி மந்திரி மகன்பாய் பரோட் இந்திரா காங்கிரஸ் கட்சியில் இருந்து 6 வருட காலத்திற்கு நீக்கப்பட்டுள்ளார்.

அகில இந்திய இந்திரா காங்கிரசின் ஒழுங்கு நடவடிக்கைக் கமிட்டி கூடி இந்த முடிவை எடுத்துள்ளது.

23.வது வட்டத்தில்

## மன்ற நிர்வாகிகள் தேர்தல்

சென்னை, டிச. 8— சென்னை 23—வது வட்டத்தில் நீதிதேவன் எம். ஜி. ஆர். பொதுப்பணி மன்றம் என்ற அமைப்பு உருவாக்கப்பட்டு நிர்வாகிகள் தேர்தல் நடந்தது.

கூட்டத்திற்கு எம். மாணிக்கம் தலைமை வகித்தார். பாளையம், பெருமாள் முன்னிலை வகித்தனர். வட்ட செயலாளர் ஸ்டான்லி சண்முகம் தேர்தலை நடத்தி வைத்தார்.

சி. முனுசாமி அவைத் தலைவராகவும், இ. செல்வராஜ் செயலாளராகவும், கே மதுரை துணைச் செயலாளராகவும், மாரியப்பன் பொருளாளராகவும் இ. மதுசூதனன், பாளையம், மாணிக்கம் ஆகியோர் ஆலோசகர்களாகவும், காப்பாளர்களாக குத்தாலம் அரங்கநாதன், ஸ்டான்லி சண்முகம் மற்றும் 9 செயற்குழு உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## கோடம்பாக்கம் குமார் நிகழ்ச்சிகள்

டிச. 9- பொன்மலை
10, 11, 12- சென்னை
13- மேலூர்
15- தூத்துக்குடி தெர்மல்
16- தூத்துக்குடி டவுன்
17, 18- வேலூர்
19- பேளூர்
25, 26- ராசிபுரம்
27- குளித்தலை

கோடம்பாக்கம்
எம். குமார்,
1, காமராஜநகர்
2-வது தெரு,
சத்யா தோட்டம்,
சென்னை—93.

வைஜயந்திமாலாவின்

## நடன இசைத்தட்டு கவர்னர் வெளியிட்டார்

சென்னை, டிச. 8- நடிகை வைஜயந்திமாலாவின் பரத நாட்டியம், மற்றும் நடனமுறை ஆகியவைகள் இசைத்தட்டாக வெளியிடப்பட்டன. இசைத்தட்டு ஆல்பம் வெளியீட்டுவிழா நேற்று சென்னையில் நடைபெற்றது.

தமிழக ஆளுநர் குரானா இசைத் தட்டு ஆல்பத்தை வெளியிட்டார். விழாவிற்கு வந்தவர்களை வைஜயந்திமாலாவின் கணவர் டாக்டர் பாலி வரவேற்றார். திருமதி குரானா, டி. ஜி. பி. ராதா கிருஷ்ணன், ஆப்ரகாம், கோவிந்தராஜ் (அகில இந்திய ரேடியோ) ஒய். ஜி. பார்த்தசாரதி மற்றும் பலர் விழாவில் கலந்து கொண்டனர். இந்த இசைத் தட்டு விற்பனை மூலம்கிடைக்கும் ராயல்டி தொகையை தேசிய நிவாரண நிதிக்கு வழங்க விருப்பதாக நடிகை வைஜயந்திமாலா தெரிவித்தார்.





பாரதியார் பிறந்த

## எட்டயபுரத்தில் உலக நாட்டு அறிஞர்கள் குழு

தூத்துக்குடி, டிச. 8. எட்டயபுரத்திற்கு உலக நாட்டு அறிஞர்கள் குழு வந்துள்ளது.

பாரதியார் பிறந்த எட்டயபுரத்திற்கு உலக நாட்டு அறிஞர்கள் குழு சென்றது. அகில இந்திய அமைதிக்குழுத் தலைவர் ரொமேஷ்சந்திரா தலைமையில் இந்தக் குழு வந்தது.



பாரதியார் பிறந்தவீடு, பாரதியார் மணி மண்டபம் ஆகியவற்றை அவர்கள் பார்த்தனர்.

அங்கு அவர்களுக்கு வரவேற்பு கொடுக்கப்பட்டது. வரவேற்புக்கு பதிலளித்து பிரான்சைச் சேர்ந்த யுனெஸ்கோ உறுப்பினர் ஆல்பர்ட் பேசுகையில் "பாரதியார் கருத்துக்கள் இன்றும் உலகுக்குப் பொருந்தக் கூடியது. அணு ஆயுத மிரட்டல் உள்ள இததருணத்தில் அதனை எதிர்த்து நிற்கும் கருத்துக்களைத் தரத்தக்கதாக பாரதியார் பாடல்கள் உள்ளன" என்றார்.

சோவியத் அறிஞர் டாக்டர் ஆல்விஸ்பேசுகையில் "பாரதியார் பாடல்களைத் தங்கள் நாட்டு மொழியில் மொழி பெயர்த்துக் கொண்ட முதல் அன்னிய நாடு ரஷ்யா தான்" என்றார்.

மற்றும் தென் ஆப்பிரிக்கா, டென்மார்க் ஆகிய நாடுகளைச் சேர்ந்த அறிஞர்களும் பேசினர்.

நேபாளத்திற்கு

## புதிய தூதர் நியமனம்

புதுடெல்லி, டிச. 8— நேபாளத்திற்கு புதிய தூதராக எச். சி. ஷரின் நியமிக்கப்பட்டுள்ளார்.

ஷரின் தற்போது ரெயில்வே சீரமைப்புக் குழுவின் தலைவராக உள்ளார்.

அதற்கு முன்பு பாதுகாப்புத்துறை செயலாளராகவும் ஷரின் பணியாற்றியுள்ளார்.

ரயில் தண்டவாளத்தில்

பாறாங்கல்லை வைத்து

## பெங்களூர் எக்ஸ்பிரஸ் ரயிலை கவிழ்க்க சதி

வேலூர், டிச. 8— பெங்களூரிலிருந்து சென்னை நோக்கி வந்த பெங்களூர் எக்ஸ்பிரஸ் ரயிலை கவிழ்க்க சதி செய்யப்பட்டது. ரயில் தண்டவாளத்தில் பெரிய பாறாங்கற்களை வைத்து ரயிலை கவிழ்க்க சதிநடந்தது. ஆனால் டிரைவரின் சாமர்த்தியத்தினால் இந்த பயங்கர விபத்து தவிர்க்கப்பட்டது. இதனால் காலை 12.40 மணிக்கு வரவேண்டிய பெங்களூர் எக்ஸ்பிரஸ் காட்பாடிக்கு அரை மணி நேரம் தாமதமாக வந்து சேர்ந்தது. இது குறித்து ரயில்வே போலீசார் வழக்கு ஒன்று பதிவு செய்து விசாரணை நடத்தி வருகின்றனர்.

## அகாலிகள் விடுதலை

புதுடெல்லி, டிச. 8— ஆசிய விளையாட்டுக்கு முன்னர் கைது செய்யப்பட்டிருந்த அகாலிகள் நிபந்தனை ஏதும் இன்றி திகார் சிறைச்சாலையிலிருந்து விடுவிக்கப்பட்டனர்.

கர்பூர்தாலா சிறைச்சாலையிலிருந்து 132பேர் விடுதலை செய்யப்பட்டனர்.

ஆசிய விளையாட்டின் போது டெல்லியில் மறியல் செய்யப்போவதாக அகாலிகள் அறிவித்திருந்தது தெரிந்ததே.





Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029.
Editor, E. PARASURAMAN